வேலையில் ஈடுபட்டிருக்கிறார்கள். அப்படி ஈடுபட்டிருக்கிறவர்கள் வேலை இல்லாமல் இருந்தால் அவர்களுக்கு வேலை கொடுக்க ஒரு திட்டத்தை அமைக்க இந்த சர்க்கார் முன் வருமா?

THE HON. SRI C. SUBRAMANIAM: It is also a suggestion. வேலை இல்லாதவர்களுக்குத்தான் இப்பொழுது வேலை கொடுக்கிறோம்.

**SRI V. SUBBIAH:** அரசியல் தியாகிகளில் உண்மையிலேயே தியாகிகள் பலர் வேலைக்கு மனுச் செய்து இருந்தும் அவர்களுக்கு வேலை கிடைக்காத காரணம் என்ன? அவர்களுக்குக் கொடுக்க காலி ஏற்படவில்லையா?

**THE HON. SRI C. SUBRAMANIAM:** பலர் விண்ணப்பம் செய்கிறார்கள். ஒரு சிலருக்குத்தான் வேலை கொடுக்க முடியும். யார் நன்றாக வேலை செய்வார்கள் என்று பார்த்து தேர்ந்து எடுக்க வேண்டியதாக இருக்கிறது. அந்த அவசியம் ஏற்படுகிறது.

*Maintenance of roads.*

* 11. Q.—SRI N. R. THIAGARAJAN: கனம் பொதுமராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா வைகை அணைக்கட்டிலிருந்து ஆண்டிப்பட்டி செல்லும் P.W.D. ரோடையும், சின்ன மதுரையிலிருந்து செல்லும் ஹைவேஸ் எஸ்டேட் ரோடையும் சர்க்கார் பராமரிப்பில் எடுத்துக்கொள்ள உத்தேசமுண்டா?

THE HON. SRI P. KAKKAN: No Sir. But there is a proposal to transfer the road from Vaigai Anicut to Andipatti from the Public Works Department to the Madurai District Board.

SRI N. R. THIAGARAJAN: சின்னமநல்லூரில் இருந்து செல்லும் ஹைவேஸ் ரோடு முக்கியமானதாகையால் அதையும் எடுத்துக்கொள்ளவேண்டும். மேலும் வைகை அணைக்கட்டு ரோடில் வருஷத்திற்கு ஒருநாள் இரண்டுநாள் போவதற்குத் தடை விதிக்கப்படுகிறதே, அதையும் நீக்குவதற்கு முன் வருவார்களா?

**THE HON. SRI P. KAKKAN:** இப்போதும் தடை இருப்பதாகத் தெரியவில்லை. கனம் அங்கத்தினர் தனியாகக் கேள்வி போட்டால் முழு விவரமும் சேகரித்துப் பதில் அளிக்கிறேன்.

*Aid to schools adopting Montessori system*

* 12 Q.—**SRI A. VEDARATHNAM:** கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) மாண்டிச்சேரி முறையில் இம் மாநிலத்தில் நடைபெறும் ஒவ்வொரு பள்ளிக்கும் அரசாங்கம் அளித்துவரும் உதவி என்ன?